ஸ்ரீ :

# ॥ श्रीमुकुन्दमाला ॥

# ஸ்ரீ முகுந்த மாலா

(மூலம், பதவுரை, கருத்துரையுடன்)

மன்னார்குடி ஸ்ரீ ராஜகோபாலஸ்வாமி

லிப்கோ




வெளியீடு

ஸ்ரீ ராம ஜயம்
வைகாசி மீ 26உ
அநல ஹ

॥ श्रीः ॥

श्री कुलशेखरदिव्यसूरिकृता

# श्री मुकुन्दमाला

ஸ்ரீ குலசேகரப் பெருமாள் அருளிய

# ஸ்ரீ முகுந்தமாலா




*உரையாசிரியர்:*

*வித்யா விசாரத, ந்யாயரத்ந*

*கிழாத்தூர் ஸ்ரீநிவாஸாச்சாரியர், P.O.L.*

*ந்யாயசிரோமணி, ஹிந்தீவிசாரத்*





*பதிப்பகத்தார்:*

**தி லிட்டில் ப்ளவர் கம்பெனி**

**சென்னை-600017 :: திருச்சி-620002**

*சென்னையில் விப்கோ ஸ்டாகிஸ்டுகள்:*

**எம். தாமோதரம் அண்டு கம்பெனி**

*8/286, எஸ்பிளனேட்*

*108, கார்ப்பொரேஷன் பழக் கடை*

**சென்னை-600001**

1975] [விலை ரூ. 1-50

||ஸ்ரீ:||

## ஸ்ரீ முகுந்தமாலா

# முன்னுரை

'ஸ்ரீ முகுந்தமாலா' என்னும் இந்த ஸ்தோத்ரம் ஸ்ரீ குலசேகர மன்னரால் இயற்றப்பட்டது என்று '**ராஜ்ஞா க்ருதா க்ருதிரியம் குலசேகரேண**' என்னும் இந்த ஸ்தோத்திரத்தின் இறுதி சுலோக வசனத்தால் தெரிகிறது.

"இந்தக் குலசேகர மன்னர் யார்? ஆழ்வார்கள் பன்னிருவரில் ஒருவரும், 'குலசேகரப்பெருமாள்' என்று போற்றப்படுபவரு மான குலசேகராழ்வார்தானா? அல்லது கேரளத்தைச் சேர்ந்த வஞ்சிக்களம் என்னும் கொல்லி நகரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்த பல மன்னர்களில், குலசேகரன் என்னும் பரம்பரைப் பெயர் பூண்ட மற்றொரு மன்னனா?" என்பது இக்காலத்திய அறிஞர் களின் ஆராய்ச்சிக்கு இலக்காகிய விஷயம்.

ஆனால், த்ருதீய ப்ரஹ்மதந்த்ர ஸ்வாமி அருளிய குருபரம்பரா ப்ரபாவத்தில் (பக்கம் 24) 'பகவத் குணங்களை அநுபவித்து ஸம்ஸ் கிருதமான முகுந்தமாலையாலும் செந்தமிழான பெருமாள் திரு மொழியாலும் ப்ரகாசிப்பித்தருளி' என்றுள்ள வாக்யத்தால் குலசேகர ஆழ்வாரே முகுந்தமாலையை இயற்றியவர் என்று விளங்குகிறது. இதையொட்டி, பக்தர்கள் மேற்கண்ட ஆராய்ச்சியில் புகாமல், 'பெருமாள் திருமொழி' யென்னும் திவ்யப் பிரபந்தத்தை அருளிய ஸ்ரீ குலசேகராழ்வாரே 'ஸ்ரீ முகுந்தமாலை'யையும் இயற்றியவர் என்று நம்புகின்றனர்.

ஆண்டவனுடைய உயர்ந்த நிலையை அறிந்தும், அவனடிமை யான ஜீவர்களின் தாழ்ந்த நிலையை உணர்ந்தும், அவனே தன் கருணையால் நம் எல்லோரையும் பிறவிக் கடலிலிருந்து கரை

யேற்ற வல்லவன் என முடிவு செய்தும், ஆழ்வார் மனமுருகப் பாடிய, நாம் அனைவரும் பாடவேண்டிய, ஸ்தோத்ரம் இது.

இந்த ஸ்தோத்ர நூலில் 40 சுலோகங்களே உள்ளன. சில பதிப்புக்களில் 46 சுலோகங்கள் இருக்கின்றன. ஆனால், நம் நாட்டில் பல பழைய ஏடுகளிலும், அச்சான பல கிரந்த லிபி நூல்களிலும் இந்த 40 சுலோகங்களே காணப்படுவதால், 40 சுலோகங்கள் மட்டுமே இந்நூலில் இடம்பெற்றுள்ளன.

இந்த சுலோகங்கள் அனைத்தும் முதியோர் முதல் குழந்தைகள் வரை எல்லோருடைய நாவிலும் இருத்திக்கொள்ளவேண்டியவை. அநவரதம் இவைகளை அநுஸந்தானம் செய்துகொண்டிருந்தால் நம் நாக்குக்கு நாமருசியும், உள்ளத்திற்கு உவகையும் உண்டாகும்.

ஒவ்வொரு சுலோகத்தின் தலைப்பும் அந்த அந்தச் சுலோகத்தில் விளக்கும் பொருளைச் சுருக்கிக் கூறும். நாகர லிபியில் அச்சிட்ட சுலோகங்களையே மனப்பாடம் செய்தால் சரியான உச்சரிப்பு வரும். அந்த லிபி தெரியாதவர்கள் தமிழில் உள்ளதையும் படிக்கலாம். பிறகு, சுலோக அமைப்புக்கேற்ப, முன்னும் பின்னும் மாறியுள்ள சொற்களைப் பொருளுக்கேற்றபடி வரிசைப்படுத்தி, பதவுரை கொடுக்கப்பட்டுள்ளது. இப் பதவுரையைப் படிப்பவருக்கு ஸம்ஸ்கிருத மொழியிலும் பயிற்சி ஏற்பட்டு, இதுபோன்ற வேறு ஸ்தோத்ரங்களைப் புரிந்துகொள்ளும் திறமையும் ஏற்படும். கருத்துரை சுருக்கமாகச் சுலோகப் பொருளை விளக்கும்.

இவை தவிர, குலசேகராழ்வார் அருளிய 'பெருமாள் திருமொழி'யிலிருந்து சில பாசுரங்கள் ஆங்காங்கு சேர்க்கப்பட்டுள்ளன. ஆஸ்திகப் பெரியோர்கள் பதவுரை கருத்துரையுடன் இந்த ஸ்தோத்ரத்தைத் தாம் படித்து, தம் குழந்தைகளுக்கும் பயிற்றுவித்து, பகவானுடைய அருளை எல்லோரும் பெறவேண்டுமென்று பணிந்து வேண்டிக்கொள்கிறேன்.

**—ஆசிரியன்**



ஸ்ரீ குலசேகராழ்வார்

(அவதாரஸ்தலமான திருவஞ்சிக்களத்தில் உள்ள மூர்த்தி)

Block : நன்றி : திருவகீந்திரபுரம் ஸ்ரீ D. ஆராவமுதன்

॥ ஸ்ரீ: ॥

# ஸ்ரீ குலசேகரப் பெருமாள் வணக்கம்

घुष्यते यस्य नगरे रङ्गयात्रा दिने दिने ।
तमहं शिरसा वन्दे राजानं कुलशेखरम् ॥

குஷ்யதே யஸ்ய நகரே ரங்கயாத்ரா திநே திநே ॥
தமஹம் ஶிரஸா வந்தே ராஜாநம் குலஶேகரம் ॥

## பதவுரை

யஸ்ய—எவருடைய
நகரே—பட்டணத்தில்
திநே திநே—தினந்தோறும்
ரங்கயாத்ரா—ஸ்ரீரங்க யாத்திரையானது
குஷ்யதே—பறைசாற்றப்படுகிறதோ
தம்—அந்த
குலஶேகரம்—குலசேகரர் என்னும்
ராஜாநம்—அரசரை
அஹம்—நான்
ஶிரஸா—தலையால்
வந்தே—வணங்குகிறேன்

## கருத்துரை

எந்த அரசனுடைய பட்டணத்தில் 'ஸ்ரீரங்கத்திற்குப் போவோம் வாருங்கள்' என்று தினந்தோறும் பறைசாற்றப் படுகிறதோ அந்த குலசேகர மன்னனைத் தலையால் வணங்குகிறேன்.

இன்னமுதம் ஊட்டுகேன் இங்கேவா பைங்கிளியே
தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள்—பொன்னஞ்
சிலைசேர் நுதலியர்வேள் சேரலர்கோன், எங்கள்
குலசேகரன் என்றே கூறு.

— பெருமாள் திருமொழித் தனியன்

|| श्रीः ||

# श्री मुकुन्दमाला

## ஸ்ரீ முகுந்தமாலா

முகுந்தா ! உன் நாமங்களை ஜபிக்கச் செய்

## 1

श्रीवल्लभेति वरदेति दयापरेति
भक्तप्रियेति भवलुण्ठनकोविदेति ।
नाथेति नागशयनेति जगन्निवासे-
त्यालापिनं प्रतिपदं कुरु मे मुकुन्द || १ ||

ஸ்ரீவல்லபேதி வரதேதி தயாபரேதி
பக்த ப்ரியேதி பவ லுண்டந கோவிதேதி |
நாதேதி நாகஶயநேதி ஜகந்நிவாஸே-
த்யாலாபிநம் ப்ரதிபதம் குரு மே முகுந்த || 1 ||

### பதவுரை

மே—என்னுடைய
முகுந்த—முகுந்தனே !
ஸ்ரீவல்லப-இதி—லக்ஷ்மீபதியே! என்றும்
வரத-இதி—வரமளிப்பவனே ! என்றும்
தயாபர-இதி—கருணையிற் சிறந்தவனே! என்றும்
பக்தப்ரிய-இதி—பக்தர்களின் அன்பனே ! என்றும்
பவ-லுண்டந, கோவித-இதி—பிறவித் தொடரை அறுப்பதில் வல்லவனே ! என்றும்
நாத-இதி—காப்பவனே ! என்றும்
நாகஶயந-இதி—பாம்பணைத் துயிலுடையானே ! என்றும்
ஜகந்நிவாஸ-இதி—உலகில் எங்கும் பரந்துளனே ! என்றும்
ப்ரதிபதம்—அடிக்கடி
ஆலாபிநம்—பேசுபவனாக (பாடுபவனாக)
(மாம்)—என்னை
குரு—செய்வாயாக.

### கருத்துரை

என் முகுந்தனே ! நான் எப்பொழுதும் ஸ்ரீ வல்லபா ! வரதா ! தயாபரா ! பக்தப்ரியா ! பிறவித்துன்பத்தைத் துடைப்பவனே ! நாதா ! நாகசயனா ! ஜகந்நிவாஸா ! என்றெல்லாம் உன் திரு நாமங்களையே அடிக்கடி அலற்றும்படி செய்வாயாக.

# 2

## ஆண்டவனுக்குப் பல்லாண்டு

जयतु जयतु देवो देवकीनन्दनोऽयं
जयतु जयतु कृष्णो वृष्णिवंशप्रदीपः ।
जयतु जयतु मेघश्यामलः कोमलाङ्गो
जयतु जयतु पृथ्वीभारनाशो मुकुन्दः ॥ २ ॥

*ஜயது ஜயது தேவோ தேவகீ நந்தநோயம்*
*ஜயது ஜயது க்ருஷ்ணோ வ்ருஷ்ணிவம்ஶ ப்ரதீப:।*
*ஜயது ஜயது மேகஶ்யாமளா: கோமளாங்கோ*
*ஜயது ஜயது ப்ருத்வீ பாரநாஶோ முகுந்த: ॥ 2 ॥*

### பதவுரை

**அயம்**—*இந்த*
**தேவகீ நந்தநஃ**—*தேவகியின் மைந்தனை*
**தேவஃ**—*தேவன்*
**ஜயது ஜயது**—*வெற்றி கொள்வானாக.*
**வ்ருஷ்ணி வம்ஶ ப்ரதீபஃ**—*வ்ருஷ்ணிகுல விளக்கான*
**க்ருஷ்ணஃ**—*கிருஷ்ணன்*
**ஜயது ஜயது**—*வெற்றி கொள்வானாக.*
**மேகஶ்யாமளஃ**—*மேகம்போல் கருத்தவனும்*
**கோமளாங்கஃ**—*மெத்தென்ற உடல் படைத்தவனும்*
**ஜயது ஜயது**—*வெற்றி கொள்வானாக.*
**ப்ருத்வீபாரநாஶஃ**—*பூமியின் பாரம் நீக்கிய*
**முகுந்தஃ**—*முகுந்தன்*
**ஜயது ஜயது**—*வெற்றி கொள்வானாக.*

### கருத்துரை

*இந்த தேவகி மைந்தன் வெற்றி கொள்ளட்டும் ஆயர்குல விளக்கான கண்ணன் வெற்றி கொள்ளட்டும். மெத்தென்ற திரு மேனி படைத்த முகில்வண்ணன் வெற்றி கொள்ளட்டும். பூபா ரத்தைத் தீர்க்கவந்த முகுந்தன் வெற்றி கொள்ளட்டும்.*

# 3

## ஆண்டவனிடம் ஒரு வரம் கேட்டல்

मुकुन्द मूर्ध्ना प्रणिपत्य याचे
भवन्त-मेकान्त-मियन्त-मर्थम् ।
अविस्मृतिस्त्वच्चरणारविन्दे
भवे भवे मेऽस्तु भवत्प्रसादात् ॥ ३ ॥

*முகுந்த! மூர்த்நா ப்ரணிபத்ய யாசே*
*பவந்த-மேகாந்த-மியந்த-மர்த்தம் |*
*அவிஸ்ம்ருதிஸ்-த்வச்-சரணாரவிந்தே*
*பவே பவே மேऽஸ்து பவத்-ப்ரஸாதாத் || 3 ||*

### பதவுரை

ஹே முகுந்த!—*முகுந்தனே*
மூர்த்நா—*தலையால்*
ப்ரணிபத்ய—*வணங்கி*
பவந்தம்—*உம்மை*
இயந்தம்—*இவ்வளவு மட்டுமான*
ஏகாந்தம்—*ஒரே முடிவான*
அர்த்தம்—*பொருளை*
யாசே—*யாசிக்கிறேன்*
*அதாவது—*
பவத்ப்ரஸாத்—*உம்முடைய அருளால்*
மே—*எனக்கு*
பவே பவே—*ஒவ்வொரு பிறவியிலும்*
த்வச் சரணாரவிந்தே—*உமது திருவடித் தாமரைகளின் மீது*
அவிஸ்ம்ருதிঃ—*மறவாமை*
அஸ்து—*இருக்கட்டும்.*

### கருத்துரை

*ஹே முகுந்தா! உம்மைத் தலையால் வணங்கி, இந்த ஒரே ஒரு பொருளை மட்டுமே உம்மிடம் யாசிக்கிறேன். அதாவது, ஒவ்வொரு பிறவியிலும் உம்முடைய அருளால் உம் திருவடிகளை நான் மறவாமல் இருக்க வேண்டும்.*

---

ஆனாத செல்வத் தரம்பையர்கள் தற்சூழ,
வானாளும் செல்வமும் மண்ணரசும் யான்வேண்டேன்,
தேனார்பூஞ் சோலைத் திருவேங்க டச்சுனையில்,
மீனாய்ப் பிறக்கும் விதியுடையே னாவேனே. — பெருமாள் திருமொழி 4.2

# 4

## உன்னை வணங்கும் காரணம்

नाहं वन्दे तव चरणयोर्द्वन्द्वमद्वन्द्वहेतोः
कुम्भीपाकं गुरुमपि हरे नारकं नापनेतुम् ।
रम्या रामा मृदुतनुलता नन्दने नापि रन्तुं
भावे भावे हृदयभवने भावयेयं भवन्तम् ॥ ४ ॥

நாஹம் வந்தே தவ சரணயோர் த்வந்த்வ மத்வந்த்வ ஹே
கும்பீபாகம் குருமபி ஹரே ! நாரகம் நாபநேது
ரம்யா ராமா ம்ருதுதநுலதா நந்தநே நாபி ரந்தும்
பாவே பாவே ஹ்ருதய-பவநே பாவயேயம் பவந்தம் || 4 ||

பதவுரை

ஹே ஹரே—ஓ ஹரியே !
அஹம்—நான்
தவ—உன்னுடைய
சரணயோ:—திருவடிகளுடைய
த்வந்த்வம்—இரட்டையை
அத்வந்த்வ ஹேதோ:—மோக்ஷத்திற்காக
ந வந்தே—வணங்கவில்லை
குரும்—பெரிய
நாரகம்—நரக சம்பந்தமான
கும்பீபாகம்—கும்பீபாகம் என்னும் நரகத்தை
அபநேதும் அபி—அகற்றுவதற்கும்
ந—இல்லை
ம்ருது தநு லதா:—மெத்தென்ற கொடி போன்ற உடலுடைய
ரம்யா:—அழகிய
ராமா:—பெண்களை
நந்தநே—நந்தனவனத்தில்
ரந்தும் அபி—ரமிப்பதற்கும்
ந—இல்லை
(வேறு எதற்கென்றால்—)
பாவே பாவே—ஒவ்வொரு பிறவியிலும்
ஹ்ருதய பவநே—என் இதயமாகிய கோயிலில்
பவந்தம்—உம்மை
பாவயேயம்—பாவிப்பேனாக

கருத்துரை

ஹே ஹரே ! உன் இரு திருவடிகளையும் முக்திக்காகவோ, கொடியதான கும்பீபாகம் என்னும் நரகத்தை நீக்கவோ, தேவ லோகத்து நந்தவனத்தில் மெத்தென்ற கொடிபோன்ற பெண்களை அநுபவிக்கவோ நான் வணங்கவில்லை. என் இதயமாகிய கோயிலில் ஒவ்வொரு பிறவியிலும் உன்னை நினைக்கவேண்டும் என்பதற்காகவே உன்னை வணங்குகிறேன்.

# 5

## பக்தி ஒன்றே எனக்குத் தேவை

नास्था धर्मे न वसुनिचये नैव कामोपभोगे
यद्यद् भव्यं भवतु भगवन् पूर्वकर्मानुरूपम् ।
एतत् प्रार्थ्यं मम बहुमतं जन्मजन्मान्तरेऽपि
त्वत्पादांभोरुहयुगगता निश्चला भक्तिरस्तु ॥ ५ ॥

*...ா தர்மே ந வஸுநிசயே நைவ காமோப போகே*
*...யத் பவ்யம் பவது பகவந் ! பூர்வகர்மாநு ரூபம் |*
*ஏதத் ப்ரார்த்யம் மம பஹுமதம் ஜந்ம ஜந்மாந்தரேபி*
*த்வத் பாதாம்போருஹ யுககதா நிஶ்சலா பக்திரஸ்து || 5 ||*

### பதவுரை

**ஹே பகவந்**—*ஓ பகவானே*
**மே**—*எனக்கு*
**தர்மே**—*தர்மத்தின்மீது*
**ஆஸ்தா**—*விருப்பம்*
**ந**—*இல்லை*
**வஸுநிசயே**—*பணக்குவியல் மீதும்*
**ந**—(விருப்பம்) இல்லை
**காமோப போகே**—*காமத்தை அனுபவிப்பதிலும்*
**நைவ**—(விருப்பம்) இல்லவே இல்லை
**பூர்வ கர்மாநு ரூபம்**—*முன் வினைக்கு ஏற்றபடி*
**யத் யத்**—*எது எது*
**பவ்யம்**—(எப்படி) *நடக்க வேண்டுமோ*
**பவது**—(அப்படி) *நடக்கட்டும்*
**மம**—*எனக்கு*
**ஜந்ம ஜந்மாந்தரேபி**—*இப்பிறவியிலும் மறு பிறவியிலும்*
**பஹுமதம்**—*மிகவும் விருப்பமான*
**ப்ரார்த்யம்**—*கோரிக்கை*
**ஏதத்**—*இதுதான்*
**த்வத்பாதாம்போருஹ கதா**—*உன் திருவடித் தாமரையைப் பற்றியதான*
**நிஶ்சலா**—*அசையாத*
**பக்திஃ**—*பக்தியானது*
**அஸ்து**—*இருக்கவேண்டும்*

### கருத்துரை

*பகவானே ! எனக்குத் தர்மத்தின்மீது பற்றில்லை. பணக் குவியல் மீதும், காம போகங்கள் மீதும் ஆசையில்லை. முன் செய்த வினைப்படி எது எப்படி நடக்கவேண்டுமோ, அப்படியே அது நடந்து போகட்டும். நான் மிகவும் விரும்பிப் பிரார்த்திப்பது யாதெனில், ஜந்ம ஜந்மாந்திரங்களிலும் உன் திருவடித் தாமரை களின்மீது மட்டுமே நிலையான பக்தி இருக்கட்டும்.*

# 6

## எப்பொழுதும் உன்னையே நினைப்பேன்

दिवि वा भुवि वा ममास्तु वासो
नरके वा नरकान्तक! प्रकामम् ।
अवधीरित-शारदारविन्दौ
चरणौ ते मरणेऽपि चिन्तयामि ।

*திவி வா புவி வா மமாஸ்து வாஸோ*
*நரகே வா நரகாந்தக! ப்ரகாமம் |*
*அவதீரித ஶாரதாரவிந்தௌ*
*சரணௌ தே மரணேऽபி சிந்தயாமி* || 6 ||

**பதவுரை**

**ஹே நரகாந்தக**—*நரகனை அழித்தவனே*
**மம**—*எனக்கு*
**திவி வா**—*தேவலோகத்திலாவது*
**புவி வா**—*பூவுலகிலாவது*
**வாஸः**—*வாசம்*
**அஸ்து**—*இருக்கட்டும்*
**நரகே வா**—*நரகத்திலாவது*
**ப்ரகாமம்**—*நன்றாக*
**(அஸ்து**—*இருக்கட்டும்)*
**அவதீரித ஶாரதாரவிந்தௌ**—*சரத் காலத்துத் தாமரை மலர்களைப் பழிக்கும்*
**தே**—*உன்னுடைய*
**சரணௌ**—*திருவடிகளை*
**மரணே அபி**—*மரண காலத்திலும்*
**சிந்தயாமி**—*நினைக்கிறேன்*

**கருத்துரை**

*நரகாசுரனை அழித்தவனே! சொர்க்கத்திலோ, பூவுலகிலோ, நரகத்திலோ எங்காகிலும் எனக்கு வாஸம் இருந்துவிட்டுப் போகட்டும். ஆனால், என்னுடைய மரண சமயத்திலும் மற்ற சமயத்திலும் சரத் காலத்துத் தாமரை மலர்களைப் போகின்ற உன் திருவடிகளையே சிந்தனை செய்கிறேன்.*

# 7

## இப்போதே உன்னிடம் மனம் லயிக்கட்டும்

कृष्ण त्वदीय-पदपङ्कज-पञ्जरान्त-
मद्यैव मे विशतु मानस-राजहंसः ।
प्राणप्रयाणसमये कफवातपित्तैः
कण्ठावरोधन-विधौ स्मरणं कुतस्ते ॥ ७ ॥

[illegible]ண ! த்வதீய பதபங்கஜ பஞ்ஜராந்த-
மத்யைவ மே விஶது மாநஸ ராஜஹம்ஸ : |
ப்ராண ப்ரயாண ஸமயே கபவாத பித்தை :
கண்டா வரோதந விதௌ ஸ்மரணம் குதஸ் தே || 7 ||

### பதவுரை

| | |
|---|---|
| ஹேக்ருஷ்ண | ஓ கிருஷ்ணனே |
| த்வதீய | உன்னுடையதான |
| பதபங்கஜ- பஞ்ஜராந்தம் | திருவடித் தாமரைகளாகிய கூட்டினுள் |
| மே | என்னுடைய |
| மாநஸ ராஜஹம்ஸః | மனமாகிய ராஜஹம்ஸம் |
| அத்யைவ | இன்றே |
| விஶது | நுழையட்டும் |
| ப்ராண-ப்ரயாண-ஸமயே | உயிர் நீங்கும் சமயத்தில் |
| கண்டாவரோதந- விதௌ | நெஞ்சையடைக்கும்போது |
| தே | உன்னுடைய |
| ஸ்மரணம் | ஞாபகம் |
| குதঃ | எப்படி வரும்? |

### கருத்துரை

கிருஷ்ணா! என்னுடைய மனமாகிய ராஜஹம்ஸம் உன்னுடைய திருவடித் தாமரைகளாகிய கூண்டில் இப்பொழுதே புகுந்து விடட்டும். கபம், வாதம், பித்தம் இவைகளால் நெஞ்சம் அடைபட்டுக் குரல் தடுமாறக்கூடிய மரண காலத்தில் உன்னை எப்படி நான் நினைக்கமுடியும் ?

# 8

## எப்பொழுதும் இறைவனையே நினைக்கிறேன்

चिन्तयामि हरिमेव सन्ततं
मन्दमन्द-हसिताननाम्बुजम् ।
नन्दगोप-तनयं परात्परं
नारदादि-मुनिबृन्द-वन्दितम् ॥ ८ ॥

*சிந்தயாமி ஹரிமேவ ஸந்ததம்*
*மந்தமந்த ஹஸிதாநநாம்புஜம் |*
*நந்தகோப தநயம் பராத்பரம்*
*நாரதாதி முநிப்ருந்த வந்திதம் || 8 ||*

### பதவுரை

**அஹம்**—*நான்*
**மந்த-மந்த-ஹஸித—ஆநநாம்புஜம்**—*புன்முறுவல் பூக்கும் திருமுகத்தாமரையை யுடையவனும்*
**நந்தகோப-தநயம்**—*நந்தகோபரின் திருமகனும்*
**பராத்பரம்**—*எல்லோரிலும் உயர்ந்தவனும்*
**நாரதாதி-முநி-ப்ருந்த வந்திதம்**—*நாரதர் முதலான முனிவர்களால் வணங்கப்பட்டவனுமான*
**ஹரிமேவ**—*ஸ்ரீ மஹா விஷ்ணுவையே*
**ஸந்ததம்**—*எப்பொழுதும்*
**சிந்தயாமி**—*ஸ்மரிக்கிறேன்*

### கருத்துரை

*நான் எப்பொழுதும் ஹரியையே நினைக்கிறேன், அவன் புன்முறுவல் பூக்கும் திருமுகத் தாமரையான்; நந்தகோபனின் மகன்; நாரதாதி முனிக்கணங்கள் வணங்கும் பராபரமான தெய்வம்.*

# 9

## எனக்கு ஸம்ஸார பாரம் நீங்கியது

करचरणसरोजे कान्तिमन्नेत्रमीने
श्रममुषि भुजवीचिव्याकुलेऽगाधमार्गे ।
हरिसरसि विगाह्यापीय तेजोजलौघं
भवमरुपरिखिन्नः खेदमद्य त्यजामि ॥ ९ ॥

கரசரண ஸரோஜே காந்திமந் நேத்ரமீநே
ஸ்ரமமுஷி புஜவீசி வ்யாகுலேऽகாதமார்கே |
ஹரிஸரஸி விகாஹ்யாபீய தேஜோ ஜலௌகம்
பவமரு பரிகிந்ந: கேதமத்ய த்யஜாமி || 9 ||

பதவுரை

**கர சரண ஸரோஜே**—கைகள், கால்களாகிய தாமரைகளைக் கொண்டதும்
**காந்தி மந்நேத்ர மீநே**—ஒளி வீசும் கண்களாகிய மீன்களுள்ளதும்
**ஸ்ரம முஷி**—சிரமங்களை அகற்றுவதும்
**புஜ வீசி வ்யாகுலே**—புயங்களாகிய அலைகளால் சஞ்சலமானதும்
**அகாத மார்கே**—ஆழமான வழியுள்ளதுமான
**ஹரி ஸரஸி**—ஹரி என்னும்—தடாகத்தில்
**விகாஹ்ய**—மூழ்கி
**தேஜோ- ஜலௌகம்**—தேஜஸாகிய ஜலங்களை
**ஆபீய**—நன்கு பானம் செய்து
**பவமருபரிகிந்ந:**—ஸம்ஸாரமாகிய பாலைவனத்தில் வருந்திய
**(அஹம்)**—நான்
**அத்ய**—இப்பொழுது
**கேதம்**—கஷ்டத்தை
**த்யஜாமி**—விட்டுவிடுகிறேன்

கருத்துரை

ஹரி என்பதே ஒரு தடாகம். இந்த தடாகத்தில் பகவானுடைய கை கால்களே தாமரை மலர்கள்; அவரது கண்களே மீன்கள்; அவரது புயங்களே அசையும் அலைகள்; பிறப்பு இறப்பு என்னும் சம்சாரமாகிய பாலைவனத்தில் சுற்றி அலைந்த நான், இத் தடாகத்தில் மூழ்கி, இறைவனது திருமேனி ஒளியாகிய ஜலத்தைப் பருகி, எனது தாகத்தை அகற்றிக்கொள்கிறேன்.

# 10

## மனமே, இறைவனையே நினைத்திரு

सरसिजनयने सशङ्खचक्रे
मुरभिदि मा विरमस्व चित्त! रन्तुम् ।
सुखतरमपरं न जातु जाने
हरिचरण-स्मरणामृतेन तुल्यम् ॥ १० ॥

*ஸரஸிஜ நயநே ஸஶங்க சக்ரே*
*முரபிதி மா விரமஸ்வ சித்த! ரந்தும் |*
*ஸுகதர மபரம் ந ஜாது ஜாநே*
*ஹரிசரண ஸ்மரணாம்ருதேந துல்யம் || 10 ||*

**பதவுரை**

**ஹே சித்த**—*ஓ மனமே*
**ஸரஸிஜ நயநே**—*தாமரைக் கண்ணனும்*
**ஸஶங்க சக்ரே**—*சங்கு சக்கரங்களைத் தாங்கியவனுமான*
**முரபிதி**—*முரன் என்னும் அரக்கனை அழித்த ஹரியிடத்தில்*
**ரந்தும்**—*பக்தி கொள்வதை*
**மா விரமஸ்வ**—*விட்டுவிடாதே*
**(யத:)**—*ஏனென்றால்*
**ஹரிசரண-ஸ்மரணாம்ருதேந**—*ஹரியினுடைய திருவடிகளை நினைத்தலாகிய அமிர்தத்தோடு*
**துல்யம்**—*சமமான*
**பரம்**—*மற்றொரு*
**ஸுகதரம்**—*உயர்ந்த சுகத்தை*
**ஜாது**—*ஒரு பொழுதும்*
**ந ஜாநே**—*அறிகிலேன்*

**கருத்துரை**

*ஓ மனமே, தாமரைக் கண்ணனும், சங்கு சக்கரங்களைத் தரிப்பவனுமான முராரியை எக்காலமும் விடாமல் தொடர்ந்து நினைத்திரு. ஹரியின் திருவடிகளை நினைத்தலாகிய அமுதத்திற்கு இணையானதும், உயர்ந்ததும் இவ்வுலகில் வேறெதுவும், எப்பொழுதும் இருப்பதாக நானறியேன்.*

# 11

## மனமே! யமபயத்தை விடு

माभीर्मन्दमनो विचिन्त्य बहुधा यामीश्चिरं यातना:
नामी न: प्रभवन्ति पापरिपव: स्वामी ननु श्रीधर: ।
आलस्यं व्यपनीय भक्तिसुलभं ध्यायस्व नारायणं
लोकस्य व्यसनापनोदनकरो दासस्य किं न क्षम: ॥ ११ ॥

[illegible]ந்தமநோ விசிந்த்ய பஹு⁼தா யாமீஶ்சிரம் யாதநாஃ
நாமீ நஃ ப்ரபவந்தி பாபரிபவஃ ஸ்வாமீ நநு ஸ்ரீதரஃ |
ஆலஸ்யம் வ்யபநீய பக்தி ஸு⁼லபம் த்யாயஸ்வ நாராயணம்
லோகஸ்ய வ்யஸநாபநோதந கரோ தாஸஸ்ய கிம் ந க்ஷமஃ ||

### பதவுரை

**ஹே மந்த மநஃ**—ஓ மூட மனமே
**யாமீஃ**—யமனுடையதான
**யாதநாஃ**—துன்புறுத்தல்களை
**சிரம்**—வெகுகாலம்
**பஹு⁼தா**—பலவிதமாக
**விசிந்த்ய**—ஆலோசித்து
**மாபீஃ**—பயப்படாதே
**பாபரிபவஃ**—பாபிகளுக்குப் பகைகளான
**அமீ**—இவை
**ந ப்ரபவந்தி**—சக்தியற்றவை (ஏனெனில்)
**ஸ்ரீதரன்**—லக்ஷ்மீபதி
**ஸ்வாமீ நநு**—நம் தலைவனல்லவா?
(ஆகவே)
**ஆலஸ்யம்**—சோம்பலை
**வ்யபநீய**—அகற்றிவிட்டு
**பக்திஸு⁼லபம்**—பக்தியினால் எளிதில் அடையக்கூடிய
**நாராயணம்**—நாராயணனை
**த்யாயஸ்வ**—த்யானம்செய்
**லோகஸ்ய**—உலகின்
**வ்யஸநாபநோதநகரஃ**—துன்பங்களைத் துடைக்கின்றவன்
**தாஸஸ்ய**—(தன்) பக்தனுடைய
**ந க்ஷமஃ**—துன்பத்தை அகற்றுவதில் வல்லமை இல்லாதவனா?

### கருத்துரை

மூட மனமே, வீணாக யம தண்டனைகளைப் பலவிதமாக நினைத்து நினைத்துப் பயப்படாதே. நமக்கு ஸ்ரீமந் நாராயணன் தெய்வம். ஆகவே, அவை நம்மைத் துன்புறுத்த முடியாது. எனவே, சோம்பலின்றி, பக்தியால் மட்டும் நமக்கு எளிதில் கிடைக்கக்கூடியவனான நாராயணனைத் தியானம் செய். உலகத்தார் எல்லாருடைய கஷ்டங்களையும் நீக்குகிறவன் தன் பக்தனுடைய கஷ்டத்தை அகற்றமாட்டானா?

# 12

## ஆண்டவனே ஓடம்

भवजलधिगतानां द्वंद्ववाताहतानां
सुतदुहितृकळत्र-त्राणभारार्दितानाम् ।
विषमविषयतोये मज्जतामप्लवानां
भवतु शरणमेको विष्णुपोतो नराणाम् ॥ १२ ॥

பவஜலதி கதாநாம் த்வந்த்வ வாதாஹதாநாம்
ஸுதது ஹித்ரு களத்ர த்ராண பாரார்திதாநாம் |
விஷம விஷய தோயே மஜ்ஜதா மப்லவாநாம்
பவது ஶரணமேகோ விஷ்ணுபோதோ நராணும் || 12 ||

### பதவுரை

பவஜலதிகதாநாம் — ஸம்ஸாரமாகிய ஸாகரத்தில் உள்ளவர்களும்
த்வந்த்வ வாதாஹதாநாம்— (சீதம்-உஷ்ணம், சுகம்-துக்கம் போன்ற) இரட்டைகளாகிய காற்றால் அடிக்கப்பட்டவர்களும்,
ஸுத-துஹித்ரு-களத்ரத்ராண பாரார்திதாநாம்—பிள்ளை, பெண், மனைவி இவர்களைக் காப்பாற்றுதலாகிய பாரத்தால் வருந்துபவர்களும்,
விஷமவிஷயதோயே—கொடிய விஷய சுகங்களாகிய ஜலத்தில்
மஜ்ஜதாம்—மூழ்கியவர்களும்
அப்லவாநாம்—ஓடமில்லாதவர்களுமான
நராணும்—மனிதர்களுக்கு
விஷ்ணுபோதஃ—மகாவிஷ்ணுவாகிய ஓடம்
ஏகஃ—ஒரே ஒரு
ஶரணம்—புகலிடமாக
பவது—ஆகட்டும்.

### கருத்துரை

பிறத்தல், இறத்தல் என்னும் ஸம்ஸாரமே ஒரு கடல். இந்தக் கடலில் உள்ள ஸம்ஸாரிகள் சுகம்-துக்கம், சீதம்-உஷ்ணம் போன்ற இரட்டைகளால் தாக்கப்படுகின்றனர்; பிள்ளைகள், பெண்கள், மனைவி என்போராகிய பாரத்தால் அமிழ்ந்தவர்கள்; புலன்களால் நுகரும் சுகங்களாகிய ஜலத்தில் மூழ்கியவர்கள்; கரையேற்றக் கூடிய ஓடமில்லாதவர்கள். அத்தகையவர்களுக்கு விஷ்ணு என்னும் ஓடமே புகலிடமாக (கரையேற்றுவதாக) ஆகிறது.

# 13

## பிறவிக்கடலைக் கடக்கும் வழி

भवजलधि मगाधं दुस्तरं निस्तरेयं
कथमहमिति चेतो मा स्म गाः कातरत्वम् ।
सरसिजदृशि देवे तावकी भक्तिरेका
नरकभिदि निषण्णा तारयिष्यत्यवश्यम् ॥ १३ ॥

*மகாதம் துஸ்தரம் நிஸ்தரேயம்*
*கதம்ஹமிதி சேதோ மாஸ்ம காஃ காதரத்வம் |*
*ஸரஸிஜத்ருஶி தேவே தாவகீ பக்திரேகா*
*நரகபிதி நிஷண்ணா தாரயிஷ்ய த்யவஶ்யம் || 13 ||*

### பதவுரை

**ஹே சேதஃ**—*ஓ மனமே*
**அகாதம்**—*ஆழமானதும்*
**துஸ்தரம்**—*கடக்க முடியாததுமான*
**பவஜலதிம்**—*பிறவிக்கடலை*
**கதம்**—*எப்படி*
**நிஸ்தரேயம்**—*கடப்பேன்*
**இதி**—*என்று*
**காதரத்வம்**—*அச்சத்தை*
**மா ஸ்ம காஃ**—*அடையாதே*
**ஸரஸிஜத்ருஶி**—*தாமரைக் கண்ணனும்*
**நரகபிதி**—*நரகனை அழித்தவனுமான*
**தேவே**—*தேவனிடத்தில்*
**நிஷண்ணா**—*வைக்கப்பட்ட*
**தாவகீ**—*உன்னுடையதான*
**பக்திஃ**—*பக்தி*
**ஏகா**—*ஒன்றே*
**அவஶ்யம்**—*தவறாமல்*
**தாரயிஷ்யதி**—*கடத்திவிடும்.*

### கருத்துரை

*ஏ மனமே! பிறப்பு, இறப்பு என்னும் ஸம்ஸாரமாகிய கடல் மிக்க ஆழமானது; கடத்தற்கரியது; 'இதை எப்படிக் கடப்பேன்' என்று பயப்படாதே. தாமரைக் கண்ணனும் நரகாசுரனை அழித்தவனுமான பகவானிடம் பக்தி செய்வாயானால் அது ஒன்றே உன்னைப் பிறவிக்கடலைத் தாண்டவைத்து விடும்.*

# 14

## ‘ஆண்டவனே! பக்தியாகிய ஓடத்தைத் தா’

तृष्णातोये मदनपवनोद्धूतमोहोर्मिमाले
दारावर्ते तनयसहजग्राहसंघाकुले च ।
संसाराख्ये महति जलधौ मज्जतां नस्त्रिधामन्!
पादाम्भोजे वरद भवतो भक्तिनावं प्रयच्छ ॥ १४ ॥

த்ருஷ்ணுதோயே மதந பவநோத்தூத மோஹோர்மிமாலே
தாராவர்த்தே தநய ஸஹஜ க்ராஹ ஸங்காகுலே ச ।
ஸம்ஸாராக்யே மஹதி ஜலதௌ மஜ்ஜதாம் நஸ் த்ரிதாமந்
பாதாம்போஜே வரத பவதோ பக்திநாவம் ப்ரயச்ச || 14 ||

### பதவுரை

**ஹே த்ரிதாமந்**—ஹே பரந்தாமனே,
**த்ருஷ்ணுதோயே**—பேராசையாகிய நீரையுடையதும்,
**மதந-பவந-உத்தூத-மோஹ-ஊர்மிமாலே**—காமமாகிய காற்றினுல் மேலுக்கு எழுப்பப்பட்ட மோகமாகிய அலைகளின் வரிசையுள்ளதும்
**தாராவர்த்தே**—மனைவியாகிய சுழலுடன் கூடியதும்
**தநய-ஸஹஜ-க்ராஹ ஸங்காகுலே ச**—மக்கள், உடன்பிறந்தோர்களாகிய முதலைக் கூட்டங்களால் குழம்பியதுமான
**ஸம்ஸாராக்யே**—ஸம்ஸாரமென்னும்
**மஹதி**—பெரியதான
**ஜலதௌ**—கடலில்
**மஜ்ஜதாம்**—மூழ்கியவர்களான
**நஃ**—எங்களுக்கு
**ஹேவரத**—ஓ வரமளிப்பவரே!
**பவதஃ**—உம்முடைய
**பாதாம்போஜே**—திருவடித் தாமரைகளின் மீது
**பக்தி நாவம்**—பக்தியாகிய ஓடத்தை
**ப்ரயச்ச**—கொடுப்பீராக.

### கருத்துரை

இந்த ஸம்ஸாரமே ஒரு பெருங்கடல். இதில் ஆசையே தண்ணீர். இதில் காமமாகிய காற்றினுல் எழுப்பப்பட்ட மோகமே அலைகளின் தொடர். மனைவியே சுழல்; இது மக்கள், உடன் பிறந்தோராகிய முதலைக் கூட்டங்களால் குழப்பமடைந்துள்ளது. இத்தகைய சமுத்திரத்தில் மூழ்குகின்ற எங்களுக்கு, ஹே! வரமளிக்கும் பரந்தாமனே! உன் திருவடிகளின் மீது பக்தியாகிய ஓடத்தைக் கொடுப்பீராக.

# 15

## 'செய்யாதன செய்யேன்'

माद्राक्षं क्षीणपुण्यान् क्षणमपि भवतो भक्तिहीनान् पदाब्जे
माश्रौषं श्राव्यबन्धं तव चरितमपास्याऽन्यदाख्यानजातम् ।
मास्मार्षं माधव त्वामपि भुवनपते चेतसाऽपह्नुवानान्
माभूवं त्वत्सपर्या व्यतिकर रहितो जन्मजन्मान्तरेऽपि ॥१५॥

*மாத்ராக்ஷம் க்ஷீணபுண்யாந் க்ஷணமபி*
*பவதோ பக்திஹீநாந் பதாப்ஜே*
*மாஶ்ரௌஷம் ஶ்ராவ்யபந்தம் தவ*
*சரிதமபாஸ்யாந்ய தாக்யாநஜாதம் |*
*மாஸ்மார்ஷம் மாதவ! த்வாமபி*
*புவநபதே! சேதஸாபஹ்நுவாநாந்*
*மாபூவம் த்வத்ஸபர்யா வ்யதிகர*
*ரஹிதோ ஜந்மஜந்மாந்தரேऽபி* || 15 ||

### பதவுரை

**ஹே புவநபதே**—*உலக நாதனே*
**மாதவ**—*ஓ மாதவனே*
**க்ஷணமபி**—*ஒரு கணநேரம்கூட*
**பவதః**—*உன்னுடைய*
**பக்தி ஹீநாந்**—*பக்தியில்லாதவர்களான*
**க்ஷீணபுண்யாந்**—*பாவிகளை*
**மாத்ராக்ஷம்**—*பார்த்திலேன்*
**தவ**—*உன்னுடைய*
**சரிதம்**—*சரித்திரத்தை*
**அபாஸ்ய**—*விட்டு*
**அந்யத்**—*வேறு*
**ஶ்ராவ்ய பந்தம்**—*செவிக்கினிய அமைப்புக் கொண்ட*
**ஆக்யாந ஜாதம்**—*கதைகளை*
**மாஶ்ரௌஷம்**—*கேட்டிலேன்*
**த்வாம்**—*உன்னை*
**சேதஸா அபி**—*மனதால்கூட*
**அபஹ்நுவாந்**—*வெறுப்பவரை*
**மாஸ்மார்ஷம்**—*நினைத்திலேன்*
**ஜந்மஜந்மாந்தரேபி**—*இப்பிறவியிலும், மற்ற பிறவிகளிலும்*
**த்வத்-ஸபர்யா-வ்யதிகர-ரஹிதः**—*உன் பூஜை சம்பந்தம் இல்லாதவனாக*
**மாபூவம்**—*இருந்திலேன்*

### கருத்துரை

*லோகநாதா! மாதவா! ஒரு கணமாவது உம்மிடம் பக்தி செய்யாத பாவிகளைக் காணமாட்டேன். உன் கதைகளைத் தவிர மற்ற கதைகளைக் கேட்க மாட்டேன். உன்னை மனத்தால் வெறுப்பவர்களை என் மனத்தாலும் நினைக்க மாட்டேன். நான் உனக்குப் பூஜை செய்யாதவனாக எப்பொழுதும் இருக்கமாட்டேன்.*

# 16

## நம் புலன்கள் செய்ய வேண்டியவை

जिह्वे कीर्तय केशवं मुररिपुं चेतो भज श्रीधरं
पाणिद्वन्द्व समर्चयाच्युत कथाः श्रोत्रद्वय त्वं शृणु ।
कृष्णं लोकय लोचनद्वय हरे र्गच्छांघ्रियुग्मालयं
जिघ्र घ्राण मुकुन्दपादतुलसीं मूर्धन् नमाधोक्षजम् ॥१६॥

ஜிஹ்வே! கீர்த்தய கேஶவம்
முராரிபும் சேதோ! பஜ ஸ்ரீதரம்
பாணித்வந்த்வ! ஸமர்ச்சயாச்யுதகதாஃ
ஶ்ரோத்ரத்வய! த்வம் ஶ்ருணு |
க்ருஷ்ணம் லோகய லோசநத்வய!
ஹரேர் கச்சாங்க்ரியுக்மாலயம்
ஜிக்ர க்ராண! முகுந்தபாத-
துளஸீம் மூர்த்தந்! நமாதோக்ஷஜம் || 16 ||

### பதவுரை

ஜிஹ்வே—நாக்கே!
கேஶவம்—கேசவனை
கீர்த்தய—துதி செய்வாயாக
சேதஃ—ஓ மனமே!
முராரிபும்—முராரியை
பஜ—பஜனம் செய்
பாணித்வந்த்வ—இரு கைகளே
ஸ்ரீதரம்—ஸ்ரீதரனை
ஸமர்ச்சய—அர்ச்சனை செய்யுங்கள்.
ஶ்ரோத்ரத்வய—காதுகளே!
த்வம்—நீங்கள்
அச்யுதகதாஃ—அச்சுதனின் கதைகளை
ஶ்ருணு—கேளுங்கள்
லோசநத்வய—கண்களே!
க்ருஷ்ணம்—கண்ணனை
லோகய—பாருங்கள்
அங்க்ரித்வய—கால்களே
ஹரேஃ—ஹரியின்
ஆலயம்—ஆலயத்திற்கு
கச்ச—செல்லுங்கள்
க்ராண—மூக்கே!
முகுந்தபாத துலஸீம்—முகுந்தனின் பாதத்திலுள்ள துளஸியை
ஜிக்ர—நுகர்வாயாக
மூர்த்தந்—தலையே
அதோக்ஷஜம்—அதோக்ஷஜன் என்பவனை
நம—வணங்குவாயாக

### கருத்துரை

நாக்கே! கேசவனைத் துதி செய்; மனமே! முராரியை பஜனை செய்; கைகளே, ஸ்ரீதரனுக்கு அர்ச்சனை செய்யுங்கள்; காதுகளே! அச்சுதனின் கதைகளைக் கேளுங்கள்; கண்களே, கிருஷ்ணனைப் பாருங்கள்; மூக்கே! முகுந்தனின் பாததுளஸியை நுகர்வாயாக! தலையே! ஆண்டவனை வணங்குவாயாக.

# 17

## பிறவிப்பிணிக்குக் கண்ணனே மருந்து

हे लोकाश्शृणुत प्रसूति मरणव्याधेश्चिकित्सामिमां
योगज्ञास्समुदाहरन्ति मुनयो यां याज्ञवल्क्यादयः ।
अन्तर्ज्योतिरमेयमेक ममृतं कृष्णाख्यमापीयतां
तत्पीतं परमौषधं वितनुते निर्वाणमात्यन्तिकम् ॥ १७ ॥

*ஹே லோகா: ஶ்ருணுத*
*ப்ரஸூதிமரணவ்யாதேஶ் சிகித்ஸாமிமாம்*
*யோகஜ்ஞா: ஸமுதாஹரந்தி*
*முநயோ யாம் யாஜ்ஞவல்க்யாதய: |*
*அந்தர் ஜ்யோதி ரமேயமேக-*
*மம்ருதம் க்ருஷ்ணாக்யமாபீயதாம்*
*தத் பீதம் பரமௌஷதம்*
*விதநுதே நிர்வாணமாத்யந்திகம்* || **17** ||

### பதவுரை

**ஹே லோகா:**—ஓ மக்கள்!
**ப்ரஸூதி-மரண வ்யாதே:**—*பிறப்பு, இறப்பென்னும் வியாதிக்கு*
**இமாம்**—*இந்த*
**சிகித்ஸாம்**—*சிகிச்சையை*
**ஶ்ருணுத**—*கேளுங்கள்*
**யாம்**—*எதை*
**யாஜ்ஞவல்க்யாதய:**—*யாஜ்ஞவல்கியர் முதலான*
**யோகஜ்ஞா:**—*யோகமறிந்த*
**முநய:**—*முனிவர்கள்*
**ஸமுதாஹரந்தி**—*கூறுகின்றனரோ*
**அந்தர்ஜ்யோதி:**—*உள்ளே அடங்கிய ஜோதியாகவும்*
**அமேயம்**—*அளவிடமுடியாததாகவும்*
**ஏகம்**—*ஒன்றாகவுமுள்ள*
**க்ருஷ்ணாக்யம்**—*கிருஷ்ணன் என்னும்*
**அம்ருதம்**—*அமிருதமானது*
**அபீயதாம்**—*குடிக்கப்படட்டும்.*
**பீதம்**—*குடிக்கப்பட்ட*
**தத்**—*அந்த*
**பரமௌஷதம்**—*உயர்ந்த மருந்து*
**ஆத்யந்திகம்**—*கடைசியான*
**நிர்வாணம்**—*மோக்ஷசுகத்தை*
**விதநுதே**—*அளிக்கிறது.*

### கருத்துரை

*மக்களே, கேளுங்கள். பிறப்பு, இறப்பென்னும் நோய்க்கு யாஜ்ஞவல்கியர் போன்ற முனிவர்கள் கூறிய மருந்து இதுதான். அதாவது, நம்முள் அந்தர்யாமியாக உள்ள ஜோதிமயனை கண்ணன்தான். அவன் நாமங்களாகிய அம்ருதத்தைப் பானம் செய்தால் சாசுவதமான மோக்ஷசுகம் கிடைக்கும். ஆகவே இதை அருந்துங்கள்.*

# 18

## நாராயண மந்த்ரஜபம் செய்யுங்கள்!

हे मर्त्याः परमं हितं शृणुत वो वक्ष्यामि संक्षेपतः
संसारार्णवमापदूर्मिबहुळं सम्यक्प्रविश्य स्थिताः ।
नानाज्ञानमपास्य चेतसि नमो नारायणायेत्यमुं
मन्त्रं सप्रणवं प्रणामसहितं प्रावर्तयध्वं मुहुः ॥ १८ ॥

ஹேமர்த்யா꞉! பரமம் ஹிதம்
ஶ்ருணுத வோ வக்ஷ்யாமி ஸங்க்ஷேபத꞉
ஸம்ஸாரார்ணவ மாபதூர்மி பஹுளம்
ஸம்யக் ப்ரவிஶ்ய ஸ்திதா꞉ |
நாநா ஜ்ஞாந மபாஸ்ய
சேதஸி நமோ நாராயணாயேத்யமும்
மந்த்ரம் ஸப்ரணவம்
ப்ரணாமஸஹிதம் ப்ராவர்த்தயத்வம் முஹு꞉ || 18 ||

### பதவுரை

ஆபதூர்மி-பஹுளம்—ஆபத்துக்களாகிய அலைகள் நிறைந்த
ஸம்ஸாரார்ணவம்—பிறவிக் கடலில்
ஸம்யக்—நன்றாக
ப்ரவிஶ்ய—மூழ்கி
ஸ்திதா꞉—இருக்கின்ற
ஹேமர்த்யா꞉—ஓ மானிடர்களே!
வ꞉—உங்களுக்கு
பரமம்—உயர்ந்த
ஹிதம்—நன்மையை
ஸங்க்ஷேபத꞉—சுருக்கமாக
வக்ஷ்யாமி—சொல்கிறேன்.
ஶ்ருணுத—கேளுங்கள்
நாநாஜ்ஞாநம்—பலவிதமான அறிவுகளை
அபாஸ்ய—ஒதுக்கிவிட்டு
சேதஸி—மனத்தில்
ஸப்ரணவம்—'ஓம்' என்னும் பிரணவத்துடன் கூடிய
நமோ நாராயணாய இதி—"நமோ நாராயணாய" என்னும்
அமும்—இந்த
மந்த்ரம்—மந்த்ரத்தை
முஹு꞉—அடிக்கடி
ப்ராவர்த்தயத்வம்—ஜபம் செய்யுங்கள்

### கருத்துரை

பலவிதமான ஆபத்துக்கள் நிரம்பிய பிறவிக்கடலில் மூழ்கிய மனிதர்களே, உங்களுக்கு க்ஷேமத்தைத் தரும் ஒரு உபாயத்தைச் சுருக்கமாகச் சொல்கிறேன், கேளுங்கள். பலவிதமான வேறு விஷயங்களைக் கற்பதைவிட்டு, ப்ரணவத்துடன் கூடிய திருவஷ்டாக்ஷரமென்னும் மந்த்ரத்தை மனதில் அடிக்கடி ஜபம் செய்யுங்கள்.

# 19

## 'உன் எதிரே பஞ்ச பூதங்களும் மிகச் சிறியவை'

पृथ्वी रेणुरणुः पयांसि कणिकाः फल्गुस्फुलिङ्गोऽनल-
स्तेजो निःश्वसनं मरुत् तनुतरं रन्ध्रं सुसूक्ष्मं नभः ।
क्षुद्रा रुद्रपितामहप्रभृतयः कीटास्समस्तास्सुराः
दृष्टे यत्र स तावको विजयते भूमावधूतावधिः ॥ १९ ॥

*ப்ருத்வீ ரேணுரணுః பயாம்ஸிகணிகாః பல்கு ஸ்புலிங்கோऽநலஸ்*
*தேஜோ நிஸ்வஸநம் மருத்தநுதரம் ரந்த்ரம் ஸுஸூக்ஷ்மம் நபః |*
*க்ஷுத்ரா ருத்ர பிதாமஹ ப்ரப்ருதயః கீடாః ஸமஸ்தாஸ் ஸுராః*
*த்ருஷ்டே யத்ர ஸ தாவகோவிஜயதே பூமாவதூதாவதிః || 19 ||*

**பதவுரை**

**யத்ர**—*எதுவானது*
**த்ருஷ்டே**—*பார்க்கப்பட்ட அளவில்*
**ப்ருத்வீ**—*பூமியானது*
**அணுః**—*சிறிய*
**ரேணுః**—*தூசாகவும்*
**பயாம்ஸி**—*ஜலமெல்லாம்*
**கணிகாః**—*திவலைகளாகவும்*
**தேஜஸ்**—*தேஜஸ் என்பது*
**பல்குஸ்புலிங்கః**—*சிறிய பொறி உருவிலுள்ள*
**அநலః**—*நெருப்பாகவும்*
**மருத்**—*காற்றானது*
**தநுதரம்**—*சிறிய*
**நிஃஸ்வஸநம்**—*மூச்சுக் காற்றாகவும்*
**நபః**—*ஆகாயம்*
**ஸுஸூக்ஷ்மம்**—*மிகச் சிறிய*
**ரந்த்ரம்**—*துவாரமாகவும்*
**ருத்ரபிதாமஹப்ரப்ருதயః**—*சிவன், பிரமன் முதலான*
**ஸமஸ்தாःஸுராః**—*ஸகல தேவர்களும்*
**க்ஷுத்ராః**—*சிறிய*
**கீடாః**—*புழுக்களாகவும் (காணப்படுகிறார்களோ)*
**ஸః**—*அப்படிப்பட்ட*
**தாவகః**—*உன்னுடையதான*
**அவதூதாவதిః**—*எல்லைகடந்த*
**பூமா**—*மஹிமையானது*
**விஜயதே**—*வெற்றி கொள்கிறது.*

**கருத்துரை**

*உன்னுடைய மகிமையைக் காணும்போது, இந்த பூமி மிகச் சிறிய தூசி போலும், ஜலமெல்லாம் ஒரு துளிபோலும், நெருப்பு ஒரு பொறி போலும், வாயு ஒரு மூச்சுக்காற்று போலும், ஆகாயம் சிறிய துவாரம் போலும், ருத்ரன், பிரமன் போன்ற தேவர்களை வரும் சிறிய புழுக்கள் போலும் தோன்றுகின்றனர். அத்தகைய எல்லை கடந்த உம்முடைய மகிமை வெற்றி கொள்வதாகுக.*

# 20

## 'எங்கள் வாழ்க்கை வழி'

बद्धेनाञ्जलिना नतेन शिरसा गात्रैस्सरोमोद्गमैः
कण्ठेन स्वरगद्गदेन नयने नोद्गीर्ण बाष्पाम्बुना ।
नित्यं त्वच्चरणारविन्दयुगळ ध्यानामृतास्वादिनां
अस्माकं सरसीरुहाक्ष सततं संपद्यतां जीवितम् ॥ २० ॥

*பத்தேநாஞ்ஜலிநா நதேந பிரஸா காத்ரைஃ ஸரோமோத்கமை*
*கண்டேந ஸ்வரகத்கதேந நயநே நோத்கீர்ண பாஷ்பாம்*
*நித்யம் த்வச்சரணாரவிந்த யுகள த்யாநாऽம்ருதாஸ்வாதிநாம்!*
*அஸ்மாகம் ஸரஸீருஹாக்ஷ! ஸததம் ஸம்பத்யதாம் ஜீவிதம் || 20*

பதவுரை

**ஹே ஸரஸீருஹாக்ஷ**—*தாமரைக் கண்ணனே!*
**பத்தேந**—*அமைக்கப்பட்ட*
**அஞ்ஜலிநா**—*கை கூப்புதலோடும்*
**நதேந**—*வணங்கிய*
**பிரஸா**—*தலையோடும்*
**ஸரோமோத்கமைஃ**—*மயிர்க் கூச்சத்துடன் கூடிய*
**காத்ரைஃ**—*தேகத்தோடும்*
**ஸ்வரகத்கதேந**—*தழுதழுத்த குரலோடும்*
**உத்கீர்ண பாஷ்பாம்புநா**—*வெளியில் வழிந்தோடும் கண்ணீருடைய,*
**நேத்ரேண**—*கண்களோடும்*
**நித்யம்**—*எப்பொழுதும்*
**த்வச்சரணாரவிந்தயுகள-த்யாநாம்ருதாஸ்வாதிநாம்**—*உன் திருவடித் தாமரைகளைத் தியானம் செய்வதாகிய அமிருத ரஸத்தைப் பருகுகிற*
**அஸ்மாகம்**—*எங்களுக்கு*
**ஸததம்**—*எப்பொழுதும்*
**ஜீவிதம்**—*வாழ்க்கையானது*
**ஸம்பத்யதாம்**—*நிறைவுள்ளதாக ஆகட்டும்.*

கருத்துரை

*ஹே தாமரைக் கண்ணனே! கைகூப்பி, தலைவணங்கி, உடல் மயிர்க் கூச்சமெடுக்க, குரல் தழுதழுக்க, கண்களில் நீர் பெருக, உன் திருவடித் தாமரைகளை நினைத்தலாகிய அமிருதரஸத்தை எப்பொழுதும் பருகிக் கொண்டு என் வாழ்நாள் நிறைவு பெறுவதாகுக.*

---

தூராத மனக்காதல் தொண்டர் தங்கள் குழாம் குழுமித் திருப்புகழ்கள் பலவும்பாடி,
ஆராத மனக்களிப்போ டழுத கண்ணீர் மழை சோர நினைந்துருகி யேத்தி நாளும்
சீரார்ந்த முழவோசை பரவை காட்டும் திருவரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்
போராழி யம்மானைக் கண்டு துள்ளிப் பூதலத்தி லென்றுகொலோ புரளும் நாளே !

— பெருமாள் திருமொழி 1-9

